ஓம்.

சிவ, விஷ்ணு, தேவி,

ஆலய பிரம்மோற்சவ

# இரகசிய வைபவம்.



இஃது

பிரம்மஸ்ரீ,

நே-சி-விஸ்வநாதசாஸ்திரியார்

அவர்களால் செய்யப்பட்டு,

இரண்டாம்பதிப்பு,

---

சென்னை

மஹா லக்ஷ்மி விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

---

1901.

ஓம்.

## சிவ, விஷ்ணு, தேவி
# ஆலய பிரம்மோற்சவ இரகசிய வைபவம்.

கேளும் பக்தர்களே? மேற்கூறிய (ம்) காரமயப் பிரம்மேஸ்வரமானது நிராமய, நிராகார, அறிவாகாரமாய் விளங்குகின்றது. (ஓ) நிர்குண அரூபாகார அறிவாகாயாகாரமாய் விளங்குகின்றது. (அ) காரமயப் பிரம்மேஸ்வரமானது சகு அரூபாகார தரிசனமூர்த்தமாய் விளங்குகின்றது. (உ) காரமயப் பிரம்வேஸ்வரமானது மந்திர நாமாகார மூர்த்திகரமாய் விளங்குகின்றது. கடைசி (ம்) காரமயப் பிரமேஸ்வரமானது சர்வசிருஷ்டிகளாய் விளங்குகின்றது. ஆகையால் நிராகார அறிவாகார மயமானது ஈஸ்வரத்துவமாம், அரூபாகார அறிவாகாயாகாரமானது ஈஸ்வரசக்தித்துவமாம். ரூபாகார தரிசனாகாரமானது ஈஸ்வர ஆன்மத்துவமாம், நாமாகாரமூர்த்திகரமானது ஈஸ்வர ஜீவத்வமாம்; ஆகையால் நிராகாரமும், அரூபாகாரமும் ஈஸ்வரமயமாம்; ரூபாகாரமும், நாமாகாரமும் அருள்மயமாம்; சர்வ சிருஷ்டி யாகாரமானது ஈஸ்வர ஜடத்துவமாம்; மனோலயஞ்ஞானிகள் முதலிரண்டு சொரூபவுண்மைகளை அகக்கண்ணால் அறிந்து கலந்துய்வர், மனோசலன அஞ்ஞானிகள் பின்னிரண்டு சொரூப உண்மைகளை புரக்கண்ணால் தரிசித்து, பூசித்து, தியானித்து உய்வர் நிராகார, அரூபாகார மென்றிரண்டுவகை சுயரூபமாய் நின்ற

பஞ்சகிருத்தியத்தைச்செய்யும் இரகசியத்தைரூபாகார நாமாகாரமாயும் நின்று செய்கிறேனென்று ஆதியிலிருந்த அருந்தவசிகளுக்கு காட்டியவாறு இக்காலத்தில் ஆலயங்களிலும் வருஷந்தோரும் முப்பத்திரண்டு தத்துவங்களையுடைய சுஷூமுனை ஞானஞடிக்கு ஒப்புவமையாகிய துவஜஸ்தம்பத்தில் (௩௨) கண்ட பிரிவுவளையமிட்டு அதின் உச்சியிலும் (௩௨) தத்துவங்களோடு மேற்கூறிய சதுர்வித சொரூபமாய் நின்று பஞ்சகிருத்தியஞ் செய்கின்றனரென்று பஞ்சகிருத்தியத்திற்கு பஞ்சவீட்டையும், சதுர்சொரூபத்திற்கு நான்கு கலசத்தையும் அமைத்து பஞ்சகிருத்திய துவஜங்கட்டி பஞ்சகிருத்திய பிரம்மோற்சவத்தை (௧௧) நாள்செய்தும், தரிசனப் பிராப்திசாந்தி வசந்த உற்சவத்தை (௨௧) நாள் செய்து முடிக்கின்றனர். மேற்கூறிய (௧௧) நாள் பிரமோற்சவத்தில் முதல் ஐந்துநாள் சிருஷ்டிக்கிரம பஞ்சகிருத்தியமுடையன, பின் ஐந்துநாள் லயக்கிரம பஞ்சகிருத்திய முடையன, கடைசி ஒரு நாள் மோக்ஷப்பிராப்தியுடையன. மேற்கூறிய (௨௧) நாள் வசந்த உற்சவத்தில் முதல் (௧௬) நாள் சோடச ஈஸ்வர காலதரிசனமுடையன, பின் (௪) நாள் சதுர்தாரக பிரம்மகாக்ஷியுடையன, கடைசி (௧) நாள் ஏகபிரம்ம ஐக்கிய முக்தியுடையன. இவ்விதமாய் (௩௨) தத்துவ விர்த்திலயக்கிரமத்தை மறவாமலிருக்க (௩௨) நாள் உற்சவத்தால் உணர்த்தப்படும் இது பக்திஞானத்திற்குரியவையாம்.

கேளுங் ஜெகத்பக்த்தர்களே? இவ்வித சதுர்சொருபாக்கினி கோலமாய் ஈஸ்வரன் விளங்குவதால் அவனைப் பகிர்

பாவத்தில் தரிசனகோலமாய்ப் பூசித்தாலும், அந்தரப்பாவத்தில் மானசகோலமாய்ப் பூசித்தலும், அவர் அனுக்கிரக அருள்பெறுவதற்கு சர்வவிதசீதளவஸ்துவால் அவர்சதுர்விதாக்கினியை சாந்திசெய்யவேண்டுமாகையால் ஈஸ்வரனுக்கும், அவ்வீஸ்வரசொரூபியாகிய ஞானிக்கும் அபிஷேக பூசையே பிரதானமென்றறிவீராக. பிரம்மோற்சவத்திற்குறிய ஈஸ்வரமயமானது சிவபாவனையாயும், விஷ்ணுபாவனையாயும், தேவிபாவனையாயும் விளங்குகின்றது. சிவபாவனையானது—ஈஸ்வரத்துவமாம், விஷ்ணுபாவனை, தேவிபாவனையானது—ஈஸ்வரசக்தித்துவமாம்.

முதல்நாள் விருக்ஷத்தடிசேர்வை தரிசன கோலமாயெழுந்தருளி இவ்விருக்ஷத்தின் வித்துபோன்றும் வேர்போன்றும் இருப்பனவாகி இவ்விருக்ஷ எண்ணிறந்த நரம்புகளுக்கும் இலைகளுக்கும் கிளைகளுக்கும் ஒத்த சப்தகோடி தத்துவங்களாயும் எண்பத்துநான்கு லக்ஷ ஜீவராசிகளாயும் நான்குவகை யோனிகளாயும், சிருஷ்டிக்கிரம விர்த்தியில் விரிந்து தோன்றி விளங்குகின்றேன் என்று விருத்திக்கிரம சிருஷ்டிகோலத்தைக் காட்டுகின்றனர்.

இரண்டாநாள் சூரியப்பிரபை சந்திரப்பிரபையின் மத்தியகதத்தில் சேர்வை தரிசனகோலமாய் எழுந்தருளி நான் இச்சூரிய சந்திரகலை பிர்பைவட்டாகார மத்தியில் நின்று சூரிய சந்திர மத்தியதக நடுநிலை ஞானக்கினிப் பிரகாசமாய் விளங்கி அண்டமண்டலமெங்கும் பிரகாசிக்க சமஷ்டிபஹிர் பாவ காலை ஊஷ்ணசூரிய, மாலை சீதளசந்திர பிரகாசத்தை

வீசியும், பிண்டசரீரங்களில் ஆங்காங்கு வியஷ்டி காலஞான அந்தர்பாவ சூட்சும ஊஷ்ண சீதள சூரியசந்திரப் பிரகாசத்தைவீசியும், பகிர்பாவ சமஷ்டி சூரியசந்திரகாந்தியால் அண்டங்களில் யாவற்றையும் தரிசிக்க வெளிச்சந்தந்தும், சிருஷ்டிகளின் பகிர்பாவ சம்ரக்ஷக கிரியாகாரமாய் விளங்கியும் ஜீவகோடிகளில் சூரிய சந்திர கலாவாசியாய் விளங்கி சர்வ தத்துவங்களையும் காலவரையளவும் அததற்குறிய சுகவின்ப போகங்களையும், தண்ட அவஸ்தை துக்கங்களையும் அளித்து திதிசொரூபமாய் இரக்ஷிக்கின்றனமென்று விர்த்திக்கிரம திதி கோலத்தைக் காட்டுகின்றனர்.

மூன்றுநாள் காலையில் நந்திவாகனத்தின்பேரி லெழுந்தருளியும், கருடவாகனத்தின்பேரி லெழுந்தருளியும் சூரிய கலையான ஜீவசக்தியினால் ஜீவன் தேடிக்கொள்ளுஞ் ஜென்மம், தண்டனை, துக்கம், காலம், முதலியவைகளை பிராப்த ரூபமாய் விதிக்கின்றோமென்று காட்டியும், மாலையில் பூதவாகனத்தின் பேரிலெழுந்தருளி சந்திரகலையான ஜீவமாயையினால் ஜீவன்தேடிக்கொள்ளும் ஜென்மாந்திரபாப சம்ஸ்கார பாப விசேஷத்தால் சம்ஹாரகோல மரணவஸ்தைவிதிக்கின்றோமென்று காட்டியும்விர்த்திக்கிரம சம்ஹாரகோலத்தைக் காட்டுகின்றனர்.

நான்காநாள் காலையில் பல்லக்குசேர்வை கோலமாயெழுந்தருளி பல்லக்கின்மேல் மூடுபோன்ற என் தொர்த்த நிலையான சுயசுபாவ பிரம்மசொரூபத்தை மறதி ஆவரணத்தினையால்மறைத்து அதற்குள் பல்லக்கின் சதுர்க்குச்சு குஞ்சங்

கள்போன்று, நானேதற்போத, தற்பேத, தற்பாவ, தற்சூனி யதிரைகளாகிய ஈஸ்வராவரண சக்தியாகாரமாய் விளங்கிக் கொண்டிருப்பதோடு பல்லக்கின் இரண்டுபக்கங்களிலுமுள்ள (௩௨) குஞ்சங்களைப்போன்று முப்பத்திரண்டு பிரதான தத்துவ ஆவரணத்திரைகளால் ஜீவனென்னை அறியவொட்டாமல் மறைந்திருக்கின்றேனென்றும், மாலையில் ஐந்துமுக நாகவாகனத்தின்பேரிலெழுந்தருளி நான் எனது சிருஷ்டி தத்துவங்களாகிய ஜீவ சைதன்னியத்தை ஈசானமுகத்தால் வாசனை விஷயம்போன்ற பரத்துவ தத்மறதியாவரணத்திரையாலும் வாமதேவமுகத்தால் விர்த்திவிஷம்போன்ற கர்த்தத்துவதற்போத ஆவரணத்திரையாலும், அகோரமுகத்தால் விஷயவிஷம்போன்ற கிருத்தியத்துவ தற்பேத ஆவரணத்திரையாலும், தற்புருட முகத்தால் ஆஸாபாஸபந்த தொந்த விஷம்போன்ற போக் துருத்வதத்பாவ ஆவரணத்திரையாலும், சத்தியோசாதமுகத்தால், கன்ம ஜென்ம, துக்க, கால, மரண, தண்ட, விஷம் போன்ற அனுபவத்வ தற்தோற்ற ஆவரணத்திரையலும் மறைக்கிறேனென்றும் விர்த்திகிரம திரோபாவ கோலத்தைக் காட்டுகின்றனர்.

ஐந்தாநாள் காலையில் பகிராண்டவட்ட சொரூபமாகிய லிங்காகாரவட்டசொரூப பிரபைமத்தியில் எழுந்தருளி நான் சிருஷ்டித்த சூரியமண்டலம், சந்திரமண்டலம், நவக்கிரகமண்டலம், நட்சத்திரமண்டலம், பூலோகம், பாதாளலோகங்கள் முதலியதுகளையும் அதுகளுக்குள் உள்ள ஜீவகோடிகளையும், இந்தவெனது பிரம்மேஸ்வர ஞானகார பகிராண்ட

வட்ட மத்தியில் மிதக்கவும் ஜீவித்து வாழவுமமைத்து அது களுக்கு உள்ளும் புறமும் ஊடுருவி நிறைந்து சர்வசாட்சி பிரம்மானந்த சுத்தப்பிரம்ம சொருபமாய் விளங்குகின்றே னென்றும் அதற்குமேல் ஏகசக்கிரக்குடை யொன்றைத்தரி த்து அச்சுத்தப்பிரம்ம சொரூபத்திற்கும் அதீதமாய் சுயசு பாவ ஆனந்தமாத்திர பிரம்மாகிய ஏகசக்கிராதிபதியாயும் விளங்குகின்றேனென்றும், மாலையில் ரிஷபவாகனத்தின் பே ரிலெழுந்தருளியும், அனுமந்தவாகனத்தின்பேரி லெழுந்தருளி யும், ரிஷபவாகன சதுஷ்பாதம்போன்று நான்குவித அந்தக் கரண மனோசொரூபமாம், இதுவே லயசொரூபமாகும், இ துவே ஜீவஞானமாகும், இதுவே பாசமாகும். இதுகள் ரிஷ பவாகன முண்டாகாரத்துக்கொத்த எனது சர்வ வியாபகச க்தி ஞான அறிவின் விரிவு ஆகையால் இவ்வந்தக்கரணம் நான்கையும் சர்வ வியாபகத்திலொடுக்க ஆத்மஞானம் அல் லது சக்திஞானமாகும் இதுவே போதசொரூபமாகும் இது வே பசுவாகும் இம்முண்டாகாரசர்வவியாபகசக்தி ஞானத் திற்குமேல் அதீதமாய் சர்வசாட்சி ஈஸ்வரஞான அறிவாய் விளங்குகின்றேன் அதில் அந்த சக்திஞானத்தை ஒடுக்க ஈஸ் வரஞானமாகும் இதுவே ஞானசொரூபமாகும், இதுவே பதி யாகும் இதற்குமேல் ஏகசக்கிரக்குடையைத்தரித்து நான் எ ன்ற சாட்சி சொரூபத்திற்கும் அதீதமாம் ஆனந்தமாத்திர பிரம்மஞான அறிவாம் ஏகமயமாய் விளங்குகின்றேன் அதில் ஈஸ்வரஞானத்தை ஒடுக்க பிரம்மஞானமாகும் இதுவே சிவ சொரூபமாகும் இதுவே பாச, பசு, பதியாதீதமாம் என்றும் விர்த்திக்கிரமபதி, பாச, பசுவாகி; ஆனந்தம், சித்து, சத்தா

கிய ; ஆனந்தம், வியாபகம், சாட்சியாகிய ; பரத்துவம், கிரி த்தியத்துவம், கர்த்தத்துவமாகிய ; நிராகாரம், ரூபம், அரூ பமாகிய ஈஸ்வரன், கிரியை, அருளாகிய ; விர்த்திக்கிரம சிவஞானபோத அனுக்கிரக கோலத்தைக் காட்டுகின்றனர்.

ஆறுநாள் யானைவாகனத்தின்பேரில் எழுந்தருளி யானை யின் சதுஷ்பாதம் போன்றது மொத்தாகாரதோற்ற ஜடத் வம், சுவாச சூட்சுமத்துவம், வாசிஜீவத்வம்,பிராண மாயைத் வம், இதுகள் யானைசரீரத்திற்கொத்த மொத்தாகார ஆத்ம ஞானத்திலுதயமாய் தும்பிக்கைபோன்ற சுஷுமுனை நாடி யில் அதோமுகமாய் அமைந்து நிற்கும் ; அவ்வாத்மஞான பீடத்திற்குமேல் விளங்கும் எனது ஈஸ்வரஞான சக்திஞான த்தின் அதிதசொரூபமாய் லிங்காகார அம்பாரிக்கொத்த பகி ரர் அண்டாகார பிரம்மசொருபமாய் விளங்குகின்றமையால் எனது சிருஷ்டிகளாகிய ஜீவராசிகள் அபிமானகோல தோ ற்ற, சூட்சும, ஜீவ, மாயை நான்கு சைதன்னியங்களை ஆத் தும சைதன்னியத்தில் ஒடுக்கி அதை ஈஸ்வரசக்தி சைதன் னியங்களில் ஒடுக்கவேண்டும் ; அதை பிரம்ம சைதைன்னி யத்தி லொடுக்கவேண்டும் என்றும் சூரியகலாம்ச வலது அப யஸ்த கரத்தை ஊர்த்தபாவ லயமபடிாய்க்காட்டி, சந்திரக லாம்ச இடது அபயாஸ்தகரத்தை அதோபாவ லயமயமாய்க் காட்டினேனென்றும் ; லயக்கிரம சிருஷ்டிகோலத்தைக் காட்டுகின்றனர்.

ஏழாநாள் இரதசேர்வைகோலமாய் எழுந்தருளி எனது விஸ்வவிராட்டீஸ்வரகோலமே எட்டு அடுக்குதத்துவங்களா

யும் அதுகளின்பிரிவுகளாயும் சப்தகோடி தேவதாம்ஸ தத்து வங்களாயும் விளங்கும் அண்ட பிண்ட ஏகோமய ஒரேசொ ரூபமாய் விளங்கி இரட்சகசொரூபமா யுலவுகின்றேனென்று காட்டுவதுபோல் இரதத்தின் ஏகமய உச்சிக்குடை சுயசுபாவ பிரமஞான சொரூபமெனவும் இதுவே பிரமமந்திரமென் றும் உச்சிக்கலசத்தை கூடஸ்த பிரம்மமெனவும் இதுவே சோடசாந்தஸ்தானமென்றும் மேல் அடுக்கை பரார்த்பரமா சுத்தப் பிரமஞான சொரூபமெனவும் இதுவே துவாதசாந்த த்தானமென்றும், மேல் இரண்டாம் அடுக்கை பரமய ஈஸ் வரசொரூபமெனவும் இதுவே மஸ்தக ஆதிஸ்தான மென் றும் மேல் மூன்றும் அடுக்கை தற்பரமயசக்தி சொரூப மெ னவும் இதுவே மஸ்தக மத்தியஸ்தானமென்றும், மேல் நான் காமடுக்கைக் கலாமய ஆத்மசொரூபமென்றும், இதுவே ம ஸதக அந்தஸ்தானமென்றும், மேல் ஐந்தாமடுக்கை நாதம யமாயைசொரூபமென்றும் இதுவே லலாட மத்தியஸ்தான மென்றும் மேல் ஆறும் அடுக்கை விந்துமய ஜிவசொரூபமெ னவும்; இதுவே புருவமத்தியஸ்தானமென்றும் நடு ஏழாமடுக் கை தாங்கும் முப்பத்திரண்டு குத்துக்கால்களை மேலும்கீழும் அகண்டமும் கண்டமும் கலக்கும் முப்பத்திரண்டு தத்து வக்கால்க ளென்றும், முன்மூன்று திரைகளே மூன்று கண்களென்றும், பின் மூன்று திரைக்களே மூன்று சிகைமெ ன்றும், வலதி இடது இரண்டு காதுகளென்றும், ஈஸ்வரன் ஏறியிருக்கும் சேடய பீட முதல்பட்டையே திரிகுணசொ ரூபமென்றம் இதுவே வாயென்றும், இடது பாக சூரியசந் திரகலை வாசிகளே இடதுபாக இரண்டு குதிரைகளென்றும்

வலதுபாக சூரியசந்திரகலை வாசிகளே வலதுபாக இரண்டு குதிரைகளென்றும், சாரதி அக்கினிகலையென்றும். இதுகள் நிர்மல சொரூபமென்றும், இதுவே காசியென்றும், அடி எட்டாமடுக்காம் பெரிய அடிப்பட்டையே சதுர் அந்தக்கரண சொரூபமென்றும், இதுவே கண்டஸ்தானமென்றும், கீழ்ப்பட்டையே பஞ்சவஸ்தா, பஞ்சகோச திரியோதஸ ராகாதிகுண சொரூபமென்றும் இதுவே இருதயஸ்தானமென்றும், கீழ்க் கீழ்ப்பட்டையே தசேந்திரியமென்றும், இதுவே நாபிஸ்தானமென்றும், சடை அச்சு இருசி பட்டையே பஞ்சபூதமென்றும் இதுவே உந்தி குண்டலிஸ்தானமென்றும். தஸசக்கிரங்களும் தசவாய்வுகளென்றும் இதுவே இரண்டு கால்களென்றும் காட்டி இத்தியாதி சொரூபங்களுக்கும் இரக்ஷக கர்த்தா ஏகசொரூபம் நானேயென்றும் ஓர்மய இரதசொரூபத்தால் உணர்த்தி இது அகண்டமாகிய அண்டதத்துவ ஏகசொரூபமாயும் கண்டமாகிய பிண்டதத்துவ சரீரசொரூபமாயும் விளங்குமென உணர்த்தி பின்னும் தசவாய்வு சக்கரத்தை நிறுத்த அசையும் விசையும்போமென்றும் பின் அவ்விசைவற்ற ஜீவசொரூபத்தை அச்சிப்பட்டை உந்தி குண்டலியிலிருந்து கீழ்க் கீழ்ப்பட்டை நாபிக்கு ஏற்றிலயப்படுத்தி, அங்கிருந்து மேல்நோக்கி கீழ்ப்பட்டை இருதயத்திற்கு ஏற்றிலயப்படுத்தி, அங்கிருந்து மேல்நோக்கி அடிப்பட்டை கண்டத்திற்கு ஏற்றிலயப்படுத்தி அங்கிருந்து மேல்நோக்கி கேடயப்பட்டை வாய்க்கு ஏற்றிலயப்படுத்தி, அங்கிருந்து மேல்நோக்கி இரதக்குதிரைகள் மத்தியபீட இரதசாரதி நாசிக்கு ஏற்றிலயப்படுத்தி, அக்கிரு

ருந்து இரண்டுகண்கள்வழியாயும் நடுவழியாயும் மேல்நோக்கி மேல் ஆறும் அடுக்காகிய புருவமத்தியத்திற்கேற்றி லயப்படுத்தி அங்கிருந்து மேல்நோக்கி மேல் ஐந்தாமடுக்காகிய லலாடமத்தியத்திற்கேற்றி லயப்படுத்தி அங்கிருந்து மேல் நோக்கி மேல் நான்காம் அடுக்காகிய மஸ்தக அந்தஸ்தானத்திற்கேற்றி லயப்படுத்தி அங்கிருந்து மேல்நோக்கி மேல் மூன்றும் அடுக்காகிய மஸ்தகமத்தியஸ்தானத்திற்கேற்றி லயப்படுத்தி அங்கிருந்து மேல்நோக்கி மேல் இரண்டாம் அடுக்காகிய மஸ்தக ஆதிஸதானத்திற்கேற்றி லயப்படுத்தி அங்கிருந்து மேல் நோக்கி மேல்முதலடுக்காகிய துவாத சாந்தத்திற்கேற்றி லயப்படுத்தி அங்கிருந்து மேல் உச்சிக்குடையாகிய பிரம்மரந்திரத்திற்கேற்றி லயப்படுத்தி அவ்வனம் சும்மாயிருந்தபடி யிருக்கும் நித்தியசுகானந்த சொரூபியாய் இருந்திடல் வேண்டுமென்றும் லயக்கிரகஸ்திதிகோலத்தைக் காட்டுகின்றனர்.

இன்னமும் இச்சரீர சிருஷ்டிரூப இரதத்தின் நான்கு சிங்கங்களும் ஜிவாத்மாவின் சர்வவித ஜிவகாருணியமில்லா லோபங், சொரேம், ஆசைப்பெருக்க சங்கற்பவிருத்தி, சர்வவித அபிமான கோலாகால விபரீதம், சர்வவித அகங்கார கோப தாப அகோர விகாரம் என்னும் இந்நான்கும் கன்மவிர்த்தியென்றும்; எட்டு யாளிகளும் ஜீவாத்துமாவின் மறதிகோல அஞ்ஞானம், ஆவரகோல அவிவேகம், விக்ஷேப கோல அபிமானம், கிரியாகோல ராகாதிகுணம், போதகோல ஈசுவாநியம தண்டகன்மம், பேதகோல நானுவிதஜென்மம் பாவகோல நானுவித துக்கம், சூனியகோல நானுவித விஷ

யம், வாசனை, உபாதி, அவஸ்தை, ஆகிய இவ்வெட்டுவித அனுபோகமென்றும்; இரதத்தின் சர்வகொடிகளெல்லாம் சப்தகோடி தத்துவங்களென்றும் அவைகளின் தேவதாபாவங்களென்றும், இரதத்தின் மணிகளெல்லாம் சப்தகோடி தேவதாபாவங்களினுடைய நாமங்களாகிய சப்தகோடி பீஜாமந்திரப்பிரணவநாத சுவரசப்தமென்றும்; இரத்தின் சுற்றுப்பக்கங்களிலுள்ள குஞ்சங்களினால் ஜீவாத்மகோடிகள் காலவரை கடந்து மாறி மாறி எண்பத்திநான்கு ஜீவராசிகளாய் அசைந்து அசைந்து அலைந்து அலைந்து ஆடி ஆடி ஓடி ஓடி அசைவற்றிருக்கும் மரணாவஸ்தையை அடையுமென்றும் இச்சிவோத்தமாவின் சிங்கங்களைப்போன்ற விர்த்திகளையும், யாளிகளைப்போன்ற அனுபவங்களையும், கொடிகளைப்போன்ற தேவதாபாவ காட்சிகளையும், மணிகளைப்போன்ற சுவரசப்தங்களையுடைய வாக்கோதயங்களையும், குஞ்சங்களைப்போன்ற மனோசலனங்களையும், ஆகிய இவ்வைந்தும் இல்லாமலும் அசைவற்றிடவும்செய்து மௌன ஏகசாட்சாத்கார கோலமாய் விளங்கவேண்டுமென்றும்; இவ்விதமாய் லயக்கிரம திதிக்கிரமத்தைக் காட்டுகின்றனர்.

எட்டாநாள் அஸ்வ வாகனத்தின்பேரி லெழுந்தருளி விர்த்திக் கிரமத்தில் ஞானகாரபாவமாய் பகிராண்டவட்டமெங்கும் சவாரிசெய்து நிறைந்து சிருஷ்டி கோலங்களாகிய சரீரங்களிலும் பிரமரந்திர உச்சிகோபுரவாயில் வழியாய் உட்புகுந்து கலாகார கோலமாய் சகஸ்திர கமலங்களில் சவாரிசெய்து பிரணவாகார அசைவுகோலமாய் ஞான

நாடியில் குண்டலிபரியந்தம் சவாரிசெய்து முட்டி அங்கிரு ந்து மீண்டும் திரும்பி விசைகோலமாய் மேலெழும்பி நாதா கார கோலமாய் பிரமந்திர பரியந்தம்போய்முட்டி அங்கி ருந்து மீண்டும் திரும்பி பிராணகார கோலமாய் நாசிகோபு றவாயிலுட்புகுந்து அங்கிருந்து மீண்டும் வாசிநாடியில் வாசி யாகாரமயமாய் இருதயமத்தியம். இருகரங்களின் நடுவிரல் களின் அந்தம், இருபாதங்களின் பெருவிரல்களின் அந்தம் முதலியவைகள் வரையிலும் சவாரிசெய்து ஓடி முட்டி அங்கி ருந்து மீண்டும் சுவாசாகார கோலமாய் மேல்சென்று உள் நாக்குவழியாய் அன்னநாடியில் குதாபரியந்தம் ஓடி முட்டி யும் நாசித்துவாரங்களின்வழியாய் வெளியில் பிரவேசித்தும் விளங்குகின்றேனென்றும் இவ்விதமாய் விளங்கும் எனது சப்தவிதசைதன்னியங்களாகிய ஜிவாத்துமாக்கள் எனது சு வாசாகார அஸ்வவரிசையைத்திருப்பி வாசியாகார சவாரியில் லயப்படுத்தி வாசியாகார சவாரியாக்கி அந்தவாசியாகார சவாரியை பிராணகார சவாரியிலயப்படுத்தி பிராணகாரச வாரியாக்கி அந்தப் பிரணகார சவாரியை நாதாகாரசவாரி யிலயப்படுத்தி பிரணவாகார சவாரியாக்கி அந்தப்பிரணவா காரசவாரியை கலாகார சவாரியிலயப்படுத்தி காலாகாரசவா ரியாக்கி அந்த காலாகார சவாரியை ஞானகார சவாரியாக்கி அந்த ஞானகாரசவாரிசொரூபமாய் அண்டபிண்ட சராசரம் எங்கும் சவாரிசெய்து நிறைந்து விளங்கிடல்வேண்டுமென்று ம் இவ்விதமாய் லயக்கிரம சம்மாரகோலத்தைக் காட்டுகின் றனர். இதில் சுவாசம் மூச்சாகும் அது மனோலயபோதை யாய் மேலுங் கீழும் செல்லுதல் பிராணனாகும். அதுமந்தி

ரபீஜாக்ஷர நாதாகாரப்பாவனை மனோலய போதாநந்தமயமாய் மேலுங்கீழும் செல்லுதல் நாமாகும். அது அக்ஷரபாவ மென்னனகோல வியாபக அறிவுலய போதானந்தமாய் மேலுங்கீழும் செல்லுதல் பிரணவமாகும். அது வெட்டவெளி பார்வையாகார அறிவுதிருஷ்டிசுயரூபசாட்சிமய அறிவாகார லய போதானந்தமயமாய் பிரமமந்திரத்தில் நிலைத்து இருத்தல் கலையாகும். அதுவெட்டவெளி ஆனந்த அறிவாகார ஞான திருஷ்டியாகமயலயபோதானந்த பரவசமாய் தன்னுள்ளம் அண்டபிண்ட சராசரமெங்கும் நிறைந்திருத்தல் ஞானமாகும்.

ஒன்பதா நாளில் சர்வசங்காபரித்தியாக சர்வநிவிர்த்தி சர்வசுழற்றி சர்தலய சர்நாச சந்நியாசகோல அருட்காருணிய நிராசபரமசாந்த நிராபிமான நிராகங்கார சர்வமௌன சதா சுகானந்த பிக்ஷாடனமூர்த்தி, தக்ஷணாமூர்த்தி, சூரிய மூர்த்தி கோலமாயெழுந்தருளி திருநீறு, திருநாமம், ஜெடா மகுடம், யோகதண்டு, கோமுக கமண்டலம், கபாலத்திருவோடு, யோகபட்டை, சிவஞானபோத சுருதி, விபூதிச் சம்படம், காவியாடை தாரணம், வியாக்ர புலித்தோலாசனம், ருத்திராக்ஷமாலை, பாதரட்சை இவைகளுடன் தரிசனந்தந்து மும்மலம் ஒழித்திடல்வேண்டும், குணம்பதின் மூன்றையுங் கொத்தோடு அழித்திடல்வேண்டும், ஜீவ அசைவு மாயாபந்தம் சக்திபோதம் ஆத்மபாவம் ஈஸ்வரபேதம் நிவிர்த்திடல் வேண்டும், பிரம்மாகாரங் கொண்டிடல்வேண்டும் என்று ஸ்தூல ஆவ்ரணம், சூட்சம ஆவரணம், ஜீவ் ஆவரணம்,

மாயை ஆவரணம், ஆத்மஆவரணம், சக்திஆவரணம், ஈஸ்வர ஆவரணம் ஆகிய சப்தவித ஆவரணங்களையும் நிவிர்த்தித்து காட்டும்மாறு லயக்கிரம திரோபவ கோலத்தைக் காட்டுகின்றனர்.

பத்தாநாளில் கௌரிபீட சக்திசொரூப கேடயத்தின் மேல் நின்ற கோலமாயும் உட்கார்ந்த கோலமாயுமிருந்துகொண்டு அசைவுத்தாண்டவ (ஓ) காரவட்டமாய் பிரம்மஞான த்தை, குதிக்குந் தாண்டவ (அ) காரவட்டமாய் ஈசுவரஞான த்தை, சாயுந்தாண்டவ உகாரவட்டமாய் சக்திஞானத்தை, அசைவற்றுநிற்கும் (ம்) காரவட்டமாய் ஆத்மஞானத்தை, மௌனத்தாண்டவ நிர்த்தனஞ்செய்துகாட்டி ஆத்மஞானனு க்கிரகம், சக்திஞானனுக்கிரகம், ஈஸ்வரஞானனுக்கிரகம், பிரம்மஞானனுக்கிரகம், ஆகிய நான்குவித ஞானனுக்கிரகங் களையும், அறிவில் விளங்க உணர்த்தி இச்சென்மபந்தம், கன் மபந்தம், விர்த்திகுணபந்தம், அபிமானபந்தம், அவிவேகபந் தம், அஞ்ஞானபந்தம், ஆசாபந்தம், பாசாபந்தம், தொந்தா ர்த்தபந்தம், விஷயபந்தம், வாசனைபந்தம், ஈஸ்னயத்திாைய பந்தம், முதலிய பந்தங்களாகிய சக்தி ஓடி ஒளித்துக்கொள் ளும்படி துறத்திவிட்டு அடியார்களிடத்திலிருந்து பந்தம்யா வையும் பறித்து தன்னைப்போலாக்கும் லயக்கிரம அனுக்கிர கோலத்தை பந்தம்பற்றி உற்சவத்தால் காட்டுகின்றனர்.

பதினோராநாளில் சூரியோதய காலத்தில் பஹிராண்ட வட்டாகார பஞ்சகிருத்திய ஏகவிஸ்வ விராட்டீஸ்வர நடேச

சப்ாபதிமூர்த்திகோலமாய் எழுந்தருளி ஈசுவரத்துவ சர்வரக சியத்தையும் தியாகராஜ தக்ஷணமூர்த்த குருமூர்த்திகோலத் தால் அநுக்கிரகிக்கபபெற்ற ஆத்மகோடிகளுக்கு ஆத்ம ஈசு வர ஐக்கியம் ஆத்ம பிரம்ம ஐக்கியம் தந்து லயக்கிரம முத் திக் கோலத்தைக் காட்டுகின்றனர்.

இவ்விதமாய் பதினொருநாள் பிரம்ம உற்சவத்தை முடி த்தபின் இருபத்தொருநாள் சாந்திவசந்த உற்சவத்தில் முதல் பதினாறுநாள் உற்சவத்தால் சோடச கலாதரிசனகாட்சி தந் தும் கடைநான்கு நாளில் சதுர்தாரக பிரம்மதரிசனக் காட்சி தந்தும் இருபத்தோராந் தினத்தில் சாட்சாத்கார சகசபாவ பிரம்ம ஐக்கியஞான காட்சிதந்தும் பிரம்மஉற்சவத்தை முடி க்கின்றனர். இந்த பிரம்ம உற்சவம் ஞானதிகாரியல்லாத கர் மாதிகாரி, கிரியாதிகாரி, உபாஸனுதிகாரி, யோகாதிகாரிக ளாகிய சரிதை, கிரியை, ஜெபதப, தியான, மூர்த்திகளாகிய ஆத்மகோடிகளுக்கு உய்யக்காட்டிய பஹிர்முக ரகசியங் களேயாம்.

